# சிவாஜி

1 செப்டம்பர் 1957

விலை 7 நயா பைசா




மறைந்த கலைஞருக்கு அஞ்சலி

சித்தர்கள்

# அவ்வையார்

கே. ஆர். பசுபதி—அறிவாலயம், கரூர்.

அவ்வையார் தமிழகத்துக்கு அறிமுகமான பெயர். ஆத்திச் சூடியும் அருங்குறளும் அருளியவர்.

அவர்பாடிய தமிழத்தனையும் அச்சுவெல்லம்! சுவைச் சுரங்கம்! மதுரவாசகம்!

சித்திரத் தமிழ் பாடிய சித்தர் வரிசையில் அவ்வையார் அகரம் பெறுகின்றார். சங்கத் தமிழிலே, செந்தமிழ் வீதி களிலே அவ்வையின் பெயர் மணம் வீசிநிற்கின்றது.

திருமூலரும், திருவள்ளுவரும், மாணிக்கவாசகரும் அவ்வையாரின் ஆதர்சத்தலைவர்கள். அரும்பாராட்டைப் பெற்றச் சித்தர்கள் தமிழகத்தின் சங்கத்தாரின் தனியா திக்கத்தைத் தகர்த்துப் புதிய பாதையை வகுத்தப் புரட்சித் தலைவர்களில் ஒருவர் அவ்வை,

திருமூலரின் நாலடியும், திருக்குறளின் இரண்டடியும் அவ்வையின் ஓரடிப்பாட்டிலே ஒப்பற்று விளையாடுகின்றது!

ஒரே பாடலில் உபதேசமும், பண்பையுமருளிய பெரிய வர் அவ்வை. சான்ருக ''ஆறுவது சினம்'' என்பதிலே சினங்கூடாதென்ற செவ்வியுரையும், அதையே, ''சினம் ஆறுவது'' என்று திருப்பிப்போடும் போது, சினம் ஆறும் தன்மையுடையது; நீண்டு நிற்காது என்று அதன் தன்மை யையும் செப்பிநிற்கின்றது. இப்படியாக, பூந்தமிழ்க் கவிதை கள் அவ்வையாரைத் தவிர ஓரடியில் வேறெவருமே கூற வில்லை யெனலாம். அவ்வையார் அருளிய அவ்வைக்குறள் சித்தர் செந்நெறியை விளக்கி நிற்கின்றது. உலகம் வாழ வழிசொன்ன அவ்வை உடல் வாழ, உயிர் வாழ. ஒளி சூழ, குங்கும வண்ணம் திகழப் பாதைவகுத்துத் தந்துள்ளார்.

சித்தர் கொடியை உயரத் தூக்கிப் பிடித்து, முத் தமிழை அலங்கரித்து, தமிழகத்தின், சித்தர் பரம்பரையை, பண்பாட்டைக்கட்டி வளர்த்தவர் அவ்வையார்.

''ஏற்றுக உலையை; ஆக்குக சோறே'' என்பது புற நானூறு. உணவின்றி உலகில்லை என்பது உலகப் பொருளா தாரம்; உடலின்றி உயிருக்கு மதிப்பில்லையென்பது ஊர றிந்த உண்மை! மூலர் முதல் இடைக்காடரும், அவ்வையும், வள்ளுவரும் தொடங்கி மணிவாசகர் வள்ளலார்வரை உடல் வளர்க்கும் உபாயம் பல கண்டவர்கள். இந்த மாபெரும் வேதசாரத்தைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றது அவ்வைக் குறள்,

''அன்னத்தாலாய வுடம்பின் பயனெல்லாம்
மூன்ஞேனைக் காட்டிவிடும்''

சுவற்றை வைத்தே சித்திரம். அது போல, உடலைக் கொண்டே மெய்யுணர்வு. உடம்பின்றேல் உணர்வில்லை. அதையே வள்ளுவர்,

''ஐயப்படாது அகத்ததை உணர்வானைத்
தெய்வத்தோடொப் பக்கொளல்'' என்கின்ருர்.

அதையே அவ்வை,

''உடம்பிஞலன்றி யுணர்வுதானில்லை
யுடப்பிஞ லுன்னியதேயாம்'' என்கின்ருர்

உடம்பின் பயன் தமய்யுணர் வென்றும், உயிர்க்குறுதி பயப்பது உடம்பின் பயனென்றும் உடலில் உத்தமனைக் காண்டலென்றும் அவ்வை பறைசாற்றுகிருர்.

கீழ் வரும் அவ்வைக்குறட் பாக்களில் காண்க

''உயிர்க்குறுதியெல்லா முடம்பின் பயனே
அயிர்ப்பின்றி ஆதியை நாடு''

''உடம்பினைப் பெற்ற பயனுவதென்னில்
உடம்பினிலு த்தமனைக்காண்''

''உணர்வாவதெல்லாமுடம்பின் பயஞ்
யுணர்கவுணர்வுடையார்''

''மாசற்றக் கொள்கை மனத்திலனடந்தக்கால்
ஈசனைக்காட்டு முடம்பு''

இவையனைத்தும் உடம்பின் பயனுணர்த்தும் அவ்வை யின் இனிய பாசுரங்கள்! ஸ்தூல தேகத்தின் மாட்சி! அன்னமயகோசத்தின் ஆட்சி! இனி சூட்சும தேகத்தின் காட்சியைப் பார்ப்போம்!

சூட்சுமதேகத்தை அவ்வை உள்ளுடம்பு எனவும், பிராண தேக மெனவும் குறிப்பிடுகின்ருர். அகக்காட்சியின் அற்புதங்களை, மிகத் தெளிவாக எடுத்தோதுகின்ருர். குறளே தெளிவுரை கூறுகின்றது.

''கற்கலாங் கேட்கலாங் கண்ணுரக்
காணலா, முற்றுடம்பாலாயவுணர்வு'' எனவும்

''வெள்ளிய பொன்மேனிய தொக்கும் வினையுடைய,
உள்ளுடம்பினுயவொளி'' என்ற குறள்மூலம் சூட்சும தேகம் பொன்னும், வெள்ளியும் கலந்த வொளி போன்ற தென விளக்கப்படுகின்றது. இதையே வடலூர் வள்ளலார்,

''ஆணிப் பொன்னம் பலத்தே கண்டகாட்சிகள்
அற்புதக் காட்சியடி—அம்மா
அற்புதக் காட்சியடி'' என்று ஆனந்த ஆரவாரம் புரி கின்ருர்.

சூட்சும உடலையே அருவுடம்பு என்பர். உருவுடம்பு செயல்படும்போது உயிர் புருவ நடுவில், லலாடத்தில், விழிப்புணர்ச்சி பீடத்தில் நிற்கும் சூட்சும அல்லது அரு வுடம்பில் பாயும்போது கழுத்தில் அல்லது விசுத்திஸ் தானத்தில் உயிர்நிற்கும். புரியட்டகமெனப்படும் கருவுடம்

(8ம் பக்கம் பார்க்க)

# மலேயாவுக்குச் சுதந்திரம்

நாளது ஆகஸ்டுமாதம் 31உ அன்று மலேயாவில் சுதந்திர சமஷ்டி அரசு ஏற்படும். பிஞங்கு, மலாகா என்ற காலனிகளும் ஒன்பது சமஸ்தானங்களும் கூடி சமஷ்டி அரசை அமைக்கின்றன. 1947-ஆம் ஆண்டுக்குப் பிறகு பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து விடுதலை பெறும் ஆருவது நாடு மலேயா. பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்ற இந்தியா. பாகிஸ்தான், இலங்கை, கஞு நாடுகளைப் போல மலேயாவும் காமன்வெல்த்தில் சேர சம்மதித்திருக்கிறது.

போர்க்காலத்தில், மலேய மக்கள் ஜப்பானிய ஆட்சியில் சிக்கித் தவித்தார்கள். ஜப்பானிய ஆக்கிரமிப்பால் நாட்டுக்கு கேடுதான் விளைந்தது. போர்நடக்கும்போதே உலகப் போக்கு மாறுவதை பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் உணர்ந்தார்கள். புழங்கால அரசு முறையை மாற்றியமைத்துக்கொள்ளும் அவசியம் வந்துவிட்டதெனக் கண்டார்கள். போர் முடிந்தது. மலேயாவில் மீண்டும் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டது. ஆனாலும், சென்ற பன்னிரண்டு ஆண்டுகளில், அங்கு பிரமிக்கும் வண்ணம் அரசியல் சீர்திருத்தம் ஏற்பட்டது.

அரசியல் முன்னேற்றத்திற்கு பல இடையூறுகளும் ஏற்பட்டன. கம்யூனிஸ்டுப் பயங்கரவாதிகள் ஆட்சியைக் கைப்புற்றும் நோக்கத்துடன் கிளர்ச்சி செய்தார்கள். அவர்களை அடக்குவது அவசியமாயிற்று. நாட்டில் நிலவிய இன வேற்றுமையும் பயங்கர உருவெடுத்தது. மலேயாவில் மலேயர்களைத் தவிர சீனர்களும், இந்தியர்களும் உண்டு. ஒவ்வொருவரும் இனப்பற்றுடன் சிந்தித்தால் அரசியலில் ஒற்றுமையில்லை. மக்கள் அனைவரும், வேற்றுமைகளை மறந்து கூட்டுறவுடன் பணியாற்றினல்தான் முன்னேற முடியும். மலேயாவின் எதிர்காலத்தை மலேய மக்களே உருவாக்க வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசு கருதிற்று.

இனத் தலைவர்கள் கூடி சிந்தித்தார்கள். கூட்டு முன்னணியை அமைத்தார்கள். ராஜதந்திரமும், தீர்க்க திருஷ்டியுமுள்ள தெங்கு அப்துல் ரஹ்மான் கூட்டு முன்னணியின் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டு, மந்திரி சபையையும் அமைத்தார். அவர் பிரிட்டிஷ் சர்க்காருடன் மலேயாவின் எதிர்காலம்பற்றி விவாதித்ததன் விளைவுதான் சுதந்திரப் பிரகடனம்.

## பொருளாதார முன்னேற்றம்

சென்ற நூற்றுண்டில் பிரிட்டிஷார் மலேயாவுக்கு சென்றபோது, அங்கு காடும் மலையும் கொசுக்கள் பலுகும் கழிகளும்தானிருந்தன. நாட்டுக் குடிகள் வேட்டையாடிப் பிழைத்தார்கள்; நல்லரசு இல்லை. ஆனல் இன்று, ஆசிய நாடுகளில் தலைசிறந்து விளங்குகிறது. மற்ற நாடுகளை விட, அங்கு மக்களின் சராசரி வருமானம் அதிகம். நல்ல ரோடுகளும், நவீன வசதிகளும், சிறந்தமுறையில் வெளிநாட்டு வாணிபமும் நிறைந்த நாடாக இருக்கிறது. சுதந்திர மலேயா அதி சீக்கிரத்தில் அரசியல்—பொருளாதாரத் துறைகளில் வலிமைமிக்கதொரு நாடாக வளரக்கூடும்.

மலேயாவின் செல்வச்சிறப்புக்கு அங்குவிளையும் ரப்பரும் ஈயமும்தான் காரணம். ஆயினும் சென்ற பத்தாண்டுகளில் வேறு பல சிறுதொழில்கள் செழித்து செல்வநிலையை உறுதிப்படுத்தியிருக்கின்றன.

1955ஆம் ஆண்டில் ஏற்றுமதியான ரப்பரின் மதிப்பு 252 கோடி ரூபாய்கள். அதே ஆண்டில் 60,000 டன்கள் ஈயம் ஏற்றுமதி செய்யப்பட்டது. 1950ஆம் ஆண்டில் அபிவிருத்தித் திட்டம் தயாரிக்கப்பட்டது. 1955ஆம் ஆண்டு இறுதியில் திட்டச் செலவு 83,000,000 பவுன்கள். சென்ற ஆண்டில் இரண்டாவது அபிவிருத்தித் திட்டம் தயாராயிற்று. திட்டச்செலவு 130,000,000 பவுன்கள். திட்ட காலம் ஏழு ஆண்டுகள். திட்டத்தில் 60 சதம் பொருளாதார முன்னேற்றத்திற்கும் 30 சதம் சமுதாய நலனுக்கும் செலவிடப்படும்.

### சமூக நலன்

மலேயாவில் கொள்ளை நோயாகப் பரவியிருந்த மலேரியா ஜுரத்தை ஒழிப்பதில் பிரிட்டிஷ் அரசு எடுத்துக்கொண்ட முயற்சி பாராட்டுக்குரியது. கல்வி—சுகாதார வசதிகளைச் செய்வதிலும் சமீப ஆண்டுகளில் தனிக் கவனமுண்டு.

இரண்டாம் அபிவிருத்தித் திட்டத்தில் கல்விக்காக 10,000,000 பவுன்களை ஒதுக்கியிருக்கிருர்கள். ஜாகை வசதிபோன்ற மூலதனச்செலவுகளுக்கு 10,000,000 பவுன்களும், குடிதண்ணீர்—பாசன அபிவிருத்திக்காக சுமார் 8,000,000 பவுன்களும், வைத்திய வசதிக்காக சுமார் 6,000,000 பவுன்களும் செலவிட உத்தேசித்திருக்கிருர்கள்.

மலேயாவில் செல்வச் செழிப்புண்டு. சிறந்த முறையில் கல்வி, வைத்திய, சுகாதாரப் பிரிவுகள் நிர்வகிக்கப்படுகின்றன. திட்டமிட்டுள்ள வசதிகளும் நிறைவேறினல் ஆரோக்கியமும் சுபிட்சமும் நிறைந்த ஒரு சமுதாயத்தைக் காணமுடியும்.

சமுதாய நலத் திட்டங்கள், பல்வேறு இன மக்களை ஒற்றுமைப்படுத்தும் நோக்கத்துடன் தயாரிக்கப்பட்டிருப்பதால், திட்டம் வெற்றிபெறும்போது, கட்டுப்பாடானசிறந்ததோர் சமுதாய வாழ்க்கையும் அங்கு ஏற்பட்டுவிடும்.





மேலே. கோலாலம்பூர் அரசாங்க மாளிகை.
கீழே. கோலாலம்பூரில் உள்ள நவீன கடைத்தெரு.

# படிக்காத பாடம்!

பரதேசி

... 'வெள்ளிக்கிழமை' என்றால் குடும்பப் பெண்கள் அதை மங்களகரமான நாளாக வரவேற்பார்கள். வீட்டை மெழுகிப் பெருக்கிக் குத்துவிளக்கேற்றிக் கொண்டாடுவார்கள். ஆனால் சாரதாவோ "ஐயோ! வெள்ளிக்கிழமை வந்து விட்டதே" என்று வாரந்தோறும் அலறினால் ...... அது ஏன்?... அவள் மட்டும் குடும்பப் பெண்ணில்லையா? அவள் மட்டும் அதை வெறுப்பானேன் ?

**பி**ற்பகல் வகுப்பு மணி அடித்துப் பத்து நிமிஷத்துக்கு மேலாகிவிட்டது. போதனா முறைப் பயிற்சிபெறும் மாணவ மாணவியருக்கு அன்று "மாடல்" வகுப்பு நடத்திக் காட்டுவதாக இருந்தது. எல்லோரும் வந்துவிட்டார்கள். சாந்தா மட்டும் வரவில்லை. "மாடல்" வகுப்புக்கு 'ஆஜ'ராகாத மாணவி பின்பு எப்படி வகுப்பு எடுத்து நடத்திக் காட்ட முடியும்?

கால் மணியாயிற்று; அரை மணியாயிற்று...சாரதா வரவில்லை. அவர்களோடு படிக்கும் ஐந்தாறு பெண்களும் தங்களுக்குள் சங்கேதபாஷையில் என்னவோ பேசிக்கொண்டார்கள்.

"உம்!....ஒருவேளை சாரதாவின் "அவர்" வந்திருப்பாரோ!"

"சேசே! போன வாரந் தானே வந்துபோனார்!"

"அப்படியானால் திடீரென்று அவளுக்கு உடம்பு ஏதாவது"

"இல்லையே!...காலை வகுப்பில் உற்சாகமாகத் தானேயிருந்தாள்!"

"சரிசரி! அங்கேபோர்டைக் கவனி!...பாடக் குறிப்பு எப்படி எழுதவேண்டுமென்று விளக்குகிறார்."

—மாணவியர் சம்பாஷணை முற்றுப்பெற்றது. மாணவர் பக்கத்தில் பேச்சுத் தொடங்கிற்று:—

"ஏய்! ஒண்ணு 'ஆப்ஸண்ட்' டுடா!"

"எது ஆப்ஸண்ட்"

"அழுமூஞ்சிதான்!"

"சேசே! கவனிச்சுப் பார்த்துச் சொல்லு!...அழுமூஞ்சி ஒருநாளும் ஆப்ஸண்ட் ஆகாதே! .... "எலிமூஞ்சி"யாயிருக்கும்; இல்லையானால் "இரட்டைவால்" வந்திருக்காது..."

"எல்லாம் கவனிச்சுப்பார்த்துத்தான் சொல்றேன்" நீ வேண்டுமானால் சந்தேகமாயிருந்தால் "ஔட்பாஸ்" வாங்கிக்கொண்டு போய்த் திரும்பி வருகிறபோது கவனி"

"அழுமூஞ்சி கரெக்ட்டா கிளாஸுக்கு வருமே! இன்னிக்கு ஏன் வரலே?"

"வீட்டிலே ஏதாவது பண்டிகையாயிருக்கும்!"

"அப்போ மத்தவங்களுக்கு மட்டுமில்லையா?....

என்னடா இடியட்! குமாரிகளுக்கும் மாஜி குமாரிக்கும் வித்யாசமில்லையா?"

"அப்போ அழுமூஞ்சி ஸ்ரீமதியாடா?"

"பின்னே என்னவாம்?"

"ஹஸ்பெண்ட் என்னடா செய்யறான்?"

"எங்கேயோ கோவாபரேடிவ் ஸ்டோர்ஸில் கணக்குப் பிள்ளையாம்...."

—"அங்கே யார் பேசறது?" என்ற அதிகாரகுண்டு ஆசிரியர் வாயிலிருந்து வெடித்து வீழ்ந்ததும் அங்கே அமைதி நிலவிற்று.

2

திருக்கண்ணபுரம் மாடவீதியில் திரிந்துகொண்டிருந்த சாம்புவைப்பள்ளிக்கூடத்தில் படிக்காமலே E. S. L. C. பாஸ் செய்ய ஏற்பாடு செய்த பெருமை அவன் வாழ்க்கை வழியில் குறுக்கிட்ட சாரதாவுக்குத் தாராளமாக உண்டு. அவனைத் தொடர்ந்து மேலே படிக்கச்சொல்ல அவளிடம் லட்சுமீகடாட்சமில்லை; ஆனால் எப்படியோ யார் மூலமோ முயற்சித்து அவனைத் திருவாரூர் 'பொய்யாமொழிப் புரொவிஷன் ஸ்டோரில்' கணக்குப் பிள்ளையாக அமர்த்திவிட்டாள், பெயரளவுக்குக் குடுத்தனம் வைப்பதுபோல் புலிவலத்தில் ஒரு வீட்டில் ஏற்பாடு செய்தாள். நிஜமாகவே குடுத்தனம் செய்ய ஆரம்பித்தால் சாம்பு மேற்கொண்டு பொருளாதாரத்துறையில் முன்னேற வழி தேடமாட்டான்; மேற்கொண்டு செலவினத்துக்குத்தான் வழி செய்வான் என்பதை அவள் வெகு விரைவிலுணர்ந்துவிட்டாள். அதனால்தான் புது மயக்கம் தெளியு முன்னேயே, தானும் ஒரு ஆசிரியையாகிச் சம்பாதித்துக் குடும்பத்தைச் செவ்வனே நடத்தத் திட்டமிட்டு விட்டாள். தஞ்சையில் தன் அம்மாவுடன் தனி ஜாகையிலிருந்து போதனாமுறைத் தவத்தைத் திறம்பட நடத்த முயன்றாள்.

சாம்பு அவள் மனோநிலையைப் புரிந்துகொள்ளத்தவறிவிட்டான். போதாக் குறைக்குப் பிரதி வெள்ளிக்கிழமையும்பொய்யாமொழிப்புரொவிஷன் ஸ்டோரில் வார விடுமுறை. என்ன நடக்கவேண்டும் என்பதைக் கேட்கவேண்டுமா? திருவாரூரிலிருந்து இரண்டு கவுளிக் கொடிக்கால் பாளையம் இளம் வெற்றிலை, ஒரு பெரிய பந்து மல்லிகைப் பூ, தஞ்சாவூரில் மலிவாகக் கிடைக்கக்கூடிய சாத்துக்கொடி வகையறா இவைகளுடன் காலை ஏழுமணி வண்டியிலேயே புறப்பட்டு விடுவான். வகுப்புக்குப் போகத் தயாராகப் புறப்பட்டுக்கொண்டிருக்கும் சாரதாவை ஒன்பதுமணிக்கெல்லாம் புதுக்கோட்டை ரஸ்தாவிலுள்ள பழைய பங்களாவின் "ஔட் ஹவு"ஸில் சந்தித்துத் திணறவைப்பான். மத்யானம் லீவு கேட்டுக்கொண்டு வந்துவிடு என்பான். சாரதா தர்மசங்கடமான நிலையில் தவிப்பாள். லீவு எடுத்துக்கொண்டு வந்தால் வீட்டில் சும்மா இருக்க விடமாட்டான். திருவையாறுக்கோ கருந்தட்டான் குடிக்கோ மாரியம்மன் கோயிலுக்கோ இப்படி எங்கேயாவது இழுத்தடிப்பான். சமீபத்தில் பார்த்த தமிழ்ப் படத்தின் வசனங்களை ஒப்புவிப்பான். எதிர்காலத்தில் தாங்கள் எங்கெங்கே போகவேண்டும் எந்தெந்தப் பூங்காவனங்களில் உலவிவர வேண்டும் என்பது பற்றியெல்லாம் அளந்து தள்ளுவான். ஒருபுறம் கணவனின் அன்பின் ஆழங்கண்டு சாரதா பூரிப்பாள்; மற்றொருபுறம் பரீட்சையில் கோட் அடிக்க நேர்ந்தால் என்ன செய்வது என்று தவிப்பாள்.

"உங்களுக்குப் புண்ணியமுண்டு! என் பயிற்சி முடிந்து பரீட்சையும் எழுதி முடிகிற மட்டும் வாரந்தவறாமல் இங்கே விஜயஞ் செய்யாதீர்கள்" என்று கரங்குவித்து வேண்டுவாள்.

"அதெப்படி முடியும்?.. வெள்ளிக்கிழமை தான் எனக்கு லீவு விட்டுத் தொலைக்கிறார்களே! கடையிருந்தால் தானே அங்கே நான் அடைபட்டுக் கிடப்பதற்கு!....அதுவுமில்லாமல் விஜயபுரம் கடை வீதிவழியே வெள்ளிக்கிழமை வரும்போது "சாமி! நல்ல குண்டுமல்லிகை முழம் முக்காலணாத்தான் வாங்கிட்டுப்

(9ம் பக்கம் பார்க்க.)

தொடர்

# எங்கிருந்தோ வந்தான்

## பாட்டி சொன்னாள்.

5

காலங்கண்ட பாட்டி, கதை சொல்லும் பாட்டியானாள்.
அவள் சொன்னாள்.
வேதபுரி என்ற ஊரில் ஒரு பள்ளிக்கூடத்து வாத்தியாரும் ஒரு செட்டியாரும் சிநேகமாக இருந்தார்கள்.
வாத்தியார் செட்டியாரிடம் கொஞ்சம் கடன் வாங்கியிருந்தார்.
செட்டியாருக்கு ஒருநாள் காலிலே முள் தைத்துப் பிரமாதமாக வீங்கியிருந்தது.
"செட்டியாரே கால் ஏன் வீங்கியிருக்கிறது? என்று வாத்தியார் கேட்டார்.
"எல்லாத்துக்கும் காரணம் கையிலே பணமில்லாதது தான்" என்று செட்டியார் சொன்னார்.
சில தினங்களுக்குப் பிறகு வாத்தியாருக்கு பலமான ஜலதோஷம் பிடித்திருந்தது. செட்டியார் வந்தார்.
"ஏன் ஐயரே, ஜலதோஷம் பலமாக இருக்கிறதே" என்று கேட்டார்.
"கையிலே பணமில்லை. அதுதான் சகலத்துக்கும் காரணம்" என்று வாத்தியார் சொன்னார்.
செட்டியார் புன்சிரிப்புடன் சொன்னார்.
"பாம்புப் பிடாரன் குழலூதுகிறான்.
குழலிலே இசை பிறந்ததா? தொளையிலே பிறந்ததா?
பாம்புப் பிடாரன் மூச்சிலே பிறந்ததா?
அவனுள்ளத்திலே பிறந்தது; குழலிலே வெளிப்பட்டது.
உள்ளம் தனியே ஒலிக்காது.
குழல் தனியே இசை புரியாது. உள்ளம் குழலிலே ஒட்டாது உள்ளம் மூச்சிலே ஒட்டும். மூச்சுக் குழலிலே ஒட்டும் குழல் பாடும்.
இஃது சக்தியின் லீலை.
அவள் உள்ளத்திலே பாடுகிறாள். அது குழலின் தொளையிலே கேட்கிறது,
பொருந்தாத பொருள்களைப் பொருத்திவைத்து அதிலே இசையுண்டாக்குதல்—சக்தி.
தொம்பப் பிள்ளைகள் பிச்சைக்குக் கத்துகின்றன.
பிடாரன் குழலையும், தொம்பக் குழந்தைகளின் குரலையும் யார் சுருதி சேர்த்துவிட்டது? சக்தி.
"ஜரிகை வேணும்; ஜரிகை!" என்றொருவன் கத்திக்கொண்டு போகிறான், அதே சுருதியில்,
ஆ! பொருள் கண்டு கொண்டேன்.
பிடாரன் உயிரிலும், தொம்பக் குழந்தைகளின் உயிரிலும், ஜரிகைக்காரன் உயிரிலும் ஒரே சக்தி விளையாடுகிறது.
கருவி பல. பாணன் ஒருவன்.
தோற்றம் பல. சக்தி ஒன்று.
அஃது வாழ்க.
என்று செட்டியார் யாரோ சொன்னதாக சொன்னார்.
அதுதான் அமரன் பாரதி அருள் வாக்கு என்று வாத்தியார் விடை பகன்றார்.
என்று பாட்டி கதையை முடித்தாள்.



## அமுத வாக்கு

அஞ்ஞானம் ஒரு தீங்கு. அதைத் தொலைக்கத் தானே வேண்டும்? மனத்தைக் கட்டுதல், மனத்தை வெல்லுதல் என்பதெல்லாம் அஞ்ஞானத்தைத் தொலைத்தல் என்ற பொருளன்றி வேறு பொருள் இல்லை.



### திருச்சி விமான தளத்தில் புதிய கட்டிடம்.

மத்திய மராமத்திலாகா திருச்சி விமான நிலையத்தில் 3,38,957 ரூபாய் செலவு மதிப்பில் ஒரு கட்டடம் கட்டுவதற்கு வேலை மேற்கொண்டிருக்கிறது. அக்கட்டடத்தில் பிரயாணிகள் தங்கியிருப்பதற்கான ஹால்கள், பெஞ்சுகள் முதலியவை அமைக்கப்படும். காரியாலய இடவசதியும், விமான மேற்பார்வை அறை, செய்திப் போக்குவரத்து அறை, சுங்க இலாகா அறை ஆகியவைகளும் இருக்கும்.

பல மாடி உள்ள அக்கட்டடத்தின் பகுதியில் சிற்றுண்டிசாலையும், காரியாலயமும், வயர்லெஸ் அறையும் இருக்கும்; அடுத்த மாடியில் ஸ்டோர்ஸ் அறையும், காரியாலயமும் இருக்கும். அதற்கு மேலே உள்ள ஏர்க்கண்டிஷன் உள்ள அறையும், ஸ்டோர்ஸ் அறையும் இருக்கும். உச்சியில் உருக்காலான மேற்பார்வைக் கோபுரம் இருக்கும். கட்டடத்தின் ஒரு பகுதி இரட்டை மாடி உள்ளதாயிருக்கும். அதில் பிரயாணிகள் காத்திருப்பதற்கான லஞ்ச், டிக்கட் கொடுக்கும் அறை முதலியவை தரைத் தளத்திலும் பிரதான நிர்வாக காரியாலயங்கள் மாடியிலுமிருக்கும். இக்கட்டடம் அடுத்த வருஷ மத்தியில் பூர்த்தியாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

———

### பாதரக்ஷைகள் ஏற்றுமதி

1957 ஜூன் மாதம் வரை மொத்தம் 71,73,075 ரூபாய் மதிப்புக்கு பாதரக்ஷைகள் ரஷ்யாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கின்றன என்றும், பாதரக்ஷைகளைச் சப்ளை செய்வதற்காக ரஷ்யாவுடன் மற்றொரு ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளது என்றும், மத்திய வர்த்தக மந்திரி ஸ்ரீ நித்தியானந்த கனுங்கோ லோக் சபாவில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் கூறினார்.



ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஞா 22] 1-9-57 [வாரம் 39


# காட்பாடி வெடி

வாண வேடிக்கைகள், உல்லாசத்தின் விளைவாக இருக்கலாம். உபயோகத்திற்கான தீப்பெட்டி ஒன்றைத் தவிர ஏனைய வாண வேடிக்கைகளை கட்டாயம் தடை செய்தாக வேண்டும். ஆண்டு தோறும் தீபாவளி விபத்துக்களின் எண்ணிக்கை பெருகி வருவதைக் கண்கூடாகப் பார்த்து வந்தும் இதைத் தடுக்காமல் வளர விட்டுக் கொண்டிருப்பது நீதமல்ல.

பட்டாசுக் கட்டுக்கள் வெடித்துகாட்பாடியில் நடைபெற்ற கோர விபத்து நெஞ்சமுருக்கும் பயங்கர சம்பவமாகக் கண்முன் இருக்கிறது. உடனே பட்டாசுக் கட்டுக்களை ரயிலில் அனுப்புவது தடை செய்யப்பட்டிருக்கிறது. உற்பத்தியைப்பற்றி திட்டமான நடவடிக்கை எடுக்காமல், ஏதோ ஒரு விபத்து வந்ததும், செய்வது இன்னது என்று தெரியாமல் தவிப்பது சர்க்கார் வழக்கமாகி வருகிறது. அரியலூர் ரயில் விபத்து நடந்த இடத்தில் இன்னமும் ரயில் ஊர்ந்து செல்வதைப் பார்த்தால், அந்த ஒரு இடம் மட்டும்தான் அபாயமானதென்றும், மற்ற இடங்களைப் பற்றிக் கவலையில்லை என்றும் ரயில்வேயினர் கருதுவது போலத் தோன்றுகிறது.

சென்றஆண்டு திருச்சியில் நடைபெற்ற வாணப்பட்டறை விபத்து நினைவுக்கு வருகிறது. தீபாவளியும் நெருங்கிக் கொண்டிருக்கிறது.

விபத்துக்களை முன்னிட்டு வாண வேடிக்கைகளை நிறுத்துவதா என்று கலா ரசிகர்கள் வருந்தக்கூடும். அபாயகரமான அணுகுண்டு தடை செய்யப்படுவது, விஞ்ஞானக் கலைக்கு அவமதிப்பு இல்லையென்றால். பட்டாசுகளைத் தடை செய்வதும் சரியானதேயாகும்.

———

## அமெரிக்க உதவி

வெளி நாடுகளுக்கு உதவி நிதிகள் கொடுப்பது என்ற அமெரிக்கக் கொள்கை இப்பொழுது அமெரிக்காவிலேயே பலத்த சிந்தனைக்கு இலக்காகியிருக்கிறது.

ஒவ்வொரு நாடும், அமெரிக்க உதவிக்கு ஏங்குவதும், பெருவாரியாக நிதிகள் வழங்கப்படுவதும், ஒரு நாட்டின் பொருளாதார, தொழில்,விஞ்ஞான முன்னேற்றத்திற்கு வரப்பிரசாதங்கள் போலப் பாவிக்கப்பட்டு வருகின்ற ஒரு சூழ்நிலை உலகில் உருவாகியிருக்கிறது. அதாவது அமெரிக்காவே இல்லாவிட்டால் கீழ்த்திசை நாடுகள் வாழவே முடியாதென்பது போன்ற கருத்து பரப்பப்பட்டு வருகிற காலம் இது.

அமெரிக்க உதவி கிடைக்கிறது என்றஉண்மை ஒருபுறம் தெளிவாக இருக்கும்போது, அதை ஏன் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது என்று கேட்கின்ற மனப்பான்மையும் உண்டாவது இயல்புதான்.

உண்மையில் அமெரிக்க உதவி, உலகில் கீழ்நிலையிலுள்ள நாடுகளை, பொருளாதார மேனிலைக்கு உயர்த்தியிருக்கிறதா என்றஅடிப்படை ஆராய்ச்சிக்கு இடம் இருக்கிறது. ஓரளவு தொழில் நுட்ப விஞ்ஞான வசதிகள் சிலநாடுகளுக்குக் கிடைப்பது உண்மைதான். ஆனால் இவற்றின் விளைவு எந்த ஒரு நாட்டின் தேசீய உயர்வாகவும் அமையவில்லை. அதற்குப் பதில், வலிவற்ற நாடுகள், ஆயுதப் பெருக்கம் செய்வதும், ராணுவ தளங்கள் அமைப்பதும் அண்டை நாடுகளை முறைத்துப் பார்ப்பதும் என்ற மண்டைக் கர்வம்தான் கண்கூடான விளைவுகள். எந்த ஒருநாடும் தனது மக்களையும், தனது உழைப்பையும், தனது செல்வத்தையும் நம்பி அவற்றைப் பெருக்க வேண்டுமென்ற உண்மையான ஊக்கம், அந்தந்த நாட்டு மக்களுக்கு உண்டாக வேண்டுமானால், மேலுக்கு உதவிபோல் தோற்றுகிற இந்த அமெரிக்க தர்ம கைங்கர்யம் நின்று போவதுதான் உலக க்ஷேமத்துக்கு உதவியாக இருக்கும்.

அரசாங்கத்தார் அமெரிக்காவிடமும் ரஷ்யாவிடமும் கோடி கோடியாக நிதியும் கடனும் வாங்க இயலவில்லை என்றால் இந்த நாடு என்ன ஆகும்? தற்கொலை செய்து கொள்ளுமா? ஒரு நாளும் இல்லை. உண்மையில் அப்படி ஒரு நெருக்கடி உண்டானால்தான் இந்த நாட்டிலுள்ள சாதாரண மக்கள் ஒவ்வொருவரும் உண்மையான சமூக உணர்ச்சி பெறுவார்கள். தேசபக்தியின் உண்மையான பொருள் அப்பொழுதுதான் மக்களுக்கு விளங்கும். சோம்பர், பிளவுகள், இன, சாதி, சமய வேறுபாடுகள் மறைந்து உழைப்பு பெருகும்.

இந்த உண்மையை — தங்கள் உதவியால் உலகம் சீரழிகின்ற உண்மையை — அமெரிக்கர்களிலேயே ஒரு சிலர் சிந்திக்கத் தொடங்கியிருப்பது மிகவும் அபூர்வமான ஒரு செய்திதான். இதன் எதிரொலி அமெரிக்க உதவி பெறும் நாடுகளில் கேட்க வேண்டும். கண் திறக்கும்.

## கி. ரா. கோபாலன்

கும்பகோணம் என்றவுடன் கு. பா. ரா. நினைவே நமக்கு வரும். அங்கு, மறுமலர்ச்சி மன்னர் கு. பா. ரா. வாழ்ந்த காலத்தில் அவரைச் சுற்றி வளைய வந்துகொண்டிருந்த இளங் கலைஞர்களில் கி. ரா. கோபாலன் ஒருவர். எங்களுக்கு இளைய சகோதரர் இளம் மனைவியையும் தனது பெரிய குருவிக் குடும்பத்தையும் விட்டு கி. ரா. கோபாலன் காலமாகிவிட்டார் என்பது எழுத்துலகத்தின் பெருநஷ்டங்களில் ஒன்று. சிறு வயதில் மிகப் பெரும் புகழ்ஈட்டிய கலைஞர் கோபாலன் அவர்கள் மறைந்தது சோக சம்பவம். அவரது பிரிவால் வாடும் குடும்பத்திற்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

## மக்களின் கலைஞர்

நாடே திடுக்கிட்டு நிலைகுலைந்து தள்ளாடுகின்ற செய்தி. கலைவாணர், எங்கள் அருமைத் தமிழ்க் கலைஞர், கொடை வள்ளல், தயாள சீலர், ஏழை பங்காளர், உத்தம மனிதர், ஈடு இணையற்ற எங்கள் கலைச் செல்வம் திரு. என். எஸ். கிருஷ்ணனைப் பறித்துக்கொண்ட காலன் கொடியவன். தமிழகத்தின் ஒவ்வொரு உயிரும் கலங்கிக்கண்ணீர்சொரிந்து நிற்கின்ற துர்ப்பாக்கியம் நேர்ந்து விட்டது. ஊருக்குஉழைத்திடல்யோகம். எனவே மறைந்த மாபெரும் கலைஞர் என். எஸ். கே. ஒரு கர்மயோகி. பணம், புகழ், பதவி எதுவும் அசைக்கமுடியாத மானுஷீக உயர்வுத்தன்மையின் ஒரு பெரும் நினைவுச் சின்னமாக எங்களிடை உலவி வந்த ஒரு பேருயிர் உறங்கி விட்டது. அவருடைய ஆன்மா சாந்தியடையும். ஆனால் அவருக்காக ஏங்கி நிற்கின்ற இத்தனை கோடி தமிழ் மக்களின் உள்ளக் குமுறல் அமைதி பெறுவது எப்படி? சகோதரி மதுரத்திற்கு என்ன ஆறுதல் கூற யாரால் இயலும்? அவர் போய்விட்டார். அவர் வாழ்ந்த வாழ்வின் ஒளி நம்முன் சுடர்விட்டு நிற்கிறது. வாழ்க கலைவாணர் நாமம், அவரது கருணையுள்ளம், அவரது கலைப் பணி. மீண்டும் அவர் தமிழ் மண்ணுக்கு வந்து பிறப்பார் என்பது உறுதி.

### இலக்கியப் பட்டறைகள்.

*1957-58*ஆம் வருஷத்தில் இலக்கியப் பட்டறைகளை ஏற்படுத்துவதற்கு, பம்பாய், பஞ்சாப், ஜம்மு-காஷ்மீர், உத்தரப் பிரதேசம், ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், கேரளா, மேற்கு வங்காளம் ஆகிய எட்டு ராஜ்யங்கள் இணங்கியுள்ளன. ஒவ்வொரு பட்டறையிலும் சுமார் 20 பேருக்குப் பயிற்சியளிக்கப்படும்.

# தெலுங்கு டைப்ரைட்டரில் சீர்திருத்தம்.

சென்னை: தெலுங்கு மொழி டைப்ரைட்டரில் சிறப்பு மிக்க சீர்திருத்தம் ஏற்பட்டுள்ளது. அதனால் விரைவாய் டைப் அடிக்கலாம்; டைப் அடிப்பதும் செம்மையாக இருக்கும். இந்தச் சீர்திருத்தஞ் செய்தவர் சென்னைக் காரியாலயம் ஒன்றில் வேலை பார்க்கும்ஒரு இளைஞர், ஓய்வு நேரத்தில் ஊன்றி உழைத்து இத்துறையில் வெற்றி கண்டவர் அவர். பத்தாண்டுசோர்வின்றி முயற்சிசெய்து மத்தாலி ராகவ ராமச்சந்திரராவ் என்னும் அந்தஇளைஞர் தெலுங்குடைப்ரைட்டரைத் திருத்தி அமைத்து விட்டார். இதனால் டைப் அடிக்கும் நேரம் 30 சதவிகிதம் குறைகின்றது. ராமச்சந்திர ராவ் தாம் திருத்தி அமைத்த டைப்ரைட்டரை இந்திய அரசாங்கத்தில் உரிமைப் பதிவு செய்து கொண்டார். இந்தப் புதிய டைப்ரைட்டரைச் செய்துவிற்கச் சென்னைக்கம்பெனி ஒன்று ஏற்பாடு செய்துள்ளது.

ராமச்சந்திர ராவுக்கு முப்பத்தாறு வயதாகிறது. அவர் சென்னையிலுள்ள அமெரிக்கச் செய்தி நிலையத்தில் தெலுங்கில் டைப் அடிக்கும் வேலை பார்க்கிறார். சென்னையில் மக்கள் நெருக்கமாக வாழும் ஒரு பகுதியில் அவர் மனைவி மக்களோடு குடியிருக்கிறார். காரியாலயத்து வேலை முடிந்த பின்னும் வாரத்து இறுதிகளிலும் அவர் சில கருவிகளைத் துணையாகக் கொண்டு டைப்ரைட்டர் அமைப்பு வேலையில் ஈடுபடுகிறார்.

அவர் தெலுங்கு டைப்ரைட்டரில் முக்கியமான சில மாறுதல்கள் செய்திருக்கிறார். சில மெய்யெழுத்துக்களோடு முதல் உயிர் எழுத்தாகிய அ என்பதுசேர்ந்து அவை உயிர் மெய் எழுத்து ஆகும்போது தெலுங்கில் தலைக்கட்டு என்னும் மேற்குறி சேர்க்கப் படுகிறது. இந்தத் தலைக்கட்டு பொதுவாக 100 வார்த்தைகளில் 40 தடவை வரும். அந்தத் தலைக்கட்டு உள்ள எழுத்தை டைப் அடிப்பதற்கு இரண்டு எழுத்தை அடிக்கும் நேரம் ஆகும். ராமச்சந்திர ராவ் அந்தத் தலைக்கட்டை மெய்யெழுத்தோடு இணைத்து ஒரு எழுத்து ஆக்கிவிட்டார். ஆதலால் டைப் அடிக்கும் நேரம் குறையும்.

தெலுங்கில் கூட்டெழுத்துக்கள் உள்ளன. ஒரு எழுத்துக்கு மேல் இன்னொரு எழுத்து இருக்கும். இப்பொழுதுள்ள தெலுங்கு டைப்ரைட்டர்களில் இவை ஒவ்வொன்றுக்கும் இரண்டு விரல் அச்சுக்கள் (கீகள்) உண்டு, சிலின்டரைக்கையால் நகர்த்தித்தான் அவற்றை அடிக்கவேண்டும். ராமச்சந்திர ராவ் சிலிண்டரைக் கையால் நகர்த்தாமல் டைப் அடிக்கும்படி டைப்ரைட்டர் அமைத்திருக்கிறார். "டிக்ரிஷிப்ட்" என்பதை அவர் தமது டைப்ரைட்டரில் சேர்த்திருப்பதால் கூட்டெழுத்துக்கு இரண்டு விரல் அச்சுகள் (கீகள்) வேண்டியதில்லை. இது டைப்ரைட்டரில் அவர் செய்துள்ள இயந்திரச் சீர்திருத்தம்.

தெலுங்கில் கையால் அச்சுக் கோப்பதற்கும் அவர் முயற்சி பயன்படும். அச்செழுத்து அறைகள் 700 வேண்டியதாக இருந்தது. அவரது முறைப்படி 300 போதும். மானோடைப் உருக்கும் முறை பற்றியும் அவர் புதுமுறை ஒன்றுகண்டுள்ளார். அதனால் இந்திய மொழிகள் பலவற்றில் மானோடைப் விஷயத்தில் மாறுதல்கள் விளையும்

ராஜமந்திரியில் டைப் அடிக்கப் படித்துக் கொண்டிருந்த காலத்திலேயே ராமச்சந்திர ராவ் டைப்ரைட்டர் அமைப்பைப் பற்றி ஆராயத் தொடங்கினர். 1940-ல் தெலுங்கு மொழியில் முதல் முதல் டைப்ரைட்டிங் மேற்படிப்பில் பரீக்ஷை எழுதியவர் அவர் ஒருவர். வேகமாய் டைப் அடித்ததற்காக அவர் ஒரு பதக்கமும் பெற்றார்.

(11ம் பக்கத் தொடர்ச்சி)

"ஒன்பது வாயில் ஒருமந்திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங்காட்டி
ஆறாதாரத்து அங்குச நிலையும்
பேருநிறுத்திப் பேச்சுரையறுத்தே
இடை பின்கலையின் எழுத்தறிவித்துக்
"கடையிற் சுழிமுனைக் கபாலமுங் காட்டி
மூன்றுமண்டலத் தின்முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்
குண்டலி யதனிற்கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட வுரைத்து
மூலாதாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்புங் கருத்தறிவித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச் சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக்கரத்தின் உறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமுஞ் சதுர்முக சூக்கமும்
எண்முகமாக இனிதெனக் கருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையுந் தெரிசனப் படுத்திக்
கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக்கருளி" என்று
அவ்வைப் பாசுரம் அகவுகின்றது.

ஆக, "அவ்வை" என்னும் சொல்லுக்கு "அ"கமாகிய எழுத்தின் பீடமாம் மூலாதாரத்திலிருந்து சித்தி பெற்றவராகலின் அவ்வையெனப்படுவர். "அவ்வை" என்பின் "ஒளி" என்பதாகும் போகர் வாக்கின்படி! "அவ்வை" என்பவர் சரசுவதியின் உருவமென்றும், அவதாரமென்றும் பகர்வர். சரஜோதி என்பதே சரசுவதி! சரநிலை வழி ஒளி கண்டவர், கொண்டவர் "அவ்வை" என மீண்டும் கூறி முடிப்போம்!

"அவ்வை" வாழ்க! அவர் தம் தாள் வாழ்க!
பிள்ளையார் சுழி வாழ்க!

(2ம் பக்கத் தொடர்ச்சி)

பில் செல்லுங்கால் இதயம் அல்லது அநாகதத்தில் நிற்கும். கஞ்சுகவுடம் பென்னும் நுண்ணுடம்பில் நிற்கும் போது உந்தியெனும் மணிபூரகத்திலும், காரணவுடம்பில் நிற்கும் போது மூலாதாரத்திலும் இயங்கும்.

— உயிர்

புருவ நடுவில் நிற்பதை சாக்கிரம் அல்லது
நனவென்பர்

கழுத்தில் நிற்பதை சொப்பனம் அல்லது
கனவென்பர்.

இதயத்தில் நிற்பதை சுழுத்தி அல்லது
துயிலென்பர்.

உந்தியில் நிற்பதை துரியம் அல்லது
உறக்கமென்பர்.

மூலாதாரத்தில் நிற்கும் நிலே அதீதம் அல்லது
பேருறக்கமென்பர்

உயிருக்கு உடம்பில் ஏற்படும் இயக்கங்களிவையாம். குறிப்பாக, அருவுடம்பையும், அதன் இயக்க நெறியையும் அவ்வை குறிப்பிடும்போது.

**''சென்றுண்டு வந்து திரிதருமுள்ளுடம்பு**
**மென்றும் கெடாதிது''** என்றும்,

**''வாயு விளுலாயவுடம்பின் பயனே**
**யாயுவினெல்லேயது''** வெனவும் கூறுகின்ருர். சூட்சுமம் அழியாதது. தொடர்வது எழுமையும் நிற்பதெனச் சாற்றுகின்ருர். இவ்வாருக உடலுயிர் பயனே இயக்கங்களைப் பற்றிப்பேசிய அவ்வை பிராணனின் தன்மையைப் பற்றியும் பேசி வழி காட்டுகிருர். இடை, பின்கலேயின் தன்மையினே, அமுத கலேயை, கலேஞானத்தைப்புகட்டுகின்ருர். பிராணுயாமத்தால், கலேமாற்றஞ்செய்வதால் நாடி சுத்தியும், அமுதம் பருகலும் பேருகக் கிடைக்கின்றதாம்.

**''இடை பின்கலேகளிரேசக மாற்றி**
**லடையுமரனருள்''** என்பதின் மூலம், அருட் சக்தி யடையு மார்க்கத்தைச் சுட்டிக் காட்டுகின்ருர்.

**''வாயு வழக்க மறிந்து செறிந்தடங்கி**
**லாயுட் பெருக்க முண்டாம்''** என்பதின் மூலம், ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும் காற்றை நன்முறையில் கும்பகம் செய்வதின் மூலம் ஆயுள் வளர்ச்சி எனப் பேசிச் செல்கின்ருர்.

மேலும், கதிர் எது? மதி எது? என்பதை விஞ்ஞான பூர்வமான கண்ணேட்டத்தில் அவ்வையார் கூறுகின்ருர்.

சூரியனும், வன்னியெனும் அக்கினியும் கூடினல் அதுவே சோமன் எனப்படும் மதியாம்.

**''சூரியன் வன்னி யொன்ருகிற் சோமனும்**
**பாருனிமிது பயன்''** —அவ்வை

சந்திரனும், வன்னியும் கலந்தால் கதிரவனும்.
**''மதியோடு வன்னியொன் ருகவே வந்தால்**
**கதிரவனு மென்றுகாண் ''**—அவ்வை

சூரியகலே, சந்திரகலே யென்பவையின் கருவை விளங்கச் சொன்னவர் அவ்வை. அதுவே வாசியாகும். அதை மேலும் போகர் என்னும் சித்தர்,

**''நாதமென்றும் விந்து வென்றும் வாசிக்கே பேரு**
**—ரவிமதியும் சிவ சக்தியென்று பேரு**
**வாதமென்றும் வசியமென்றுமதற்கே பேரு**
**நீதமென்றும் பூமியென்றுமிதற்கே பேரு**
**நிலேயான வேகமென்று மனந்தமென்று பேரு**
**காதமென்றும் தாரமென்றுமிதற்கே பேரு**
**கண்ணெளியாய் நின்றதிதிரண்டுந்தானே''**

இதையே அவ்வையார் பாடிய ''கலேஞானம்''

**''சத்தியாஞ் சந்திரனே செங்கதிரோனூடுருவில்.**
**முத்திக்கு மூலமது''** என்று கூறுகின்றது.

முத்தி என்பது என்ன? முத்தி என்ருல், சூரியகலே, சந்திரகலே, சுழிமுனேயென்னும் அக்னிகலே என்னும் மூன்று தீக்களேயே குறிப்பதாகும், சூரியகலே, சந்திரகலே மாற்றத்தையே, தட்சிணுயன மென்றும், உத்திராயணமென்றும் அவ்வை கூறுகின்ருர். பாடலேப்பாருங்கள்.

**''அயனங்கொள் சந்திரனுலாதித்யனென்றில்**
**நயனமா முத்திக்கு வீடு''**

இதையேதான்.

**''நேத்திரத்தைக் காகம்போல்**
**நிச்சயமாய்கார்க்க**
**ஆத்துமத்திலானந்தமாம்''** என்று காகபுசுண்டரெனும் சித்தர் கூறுகின்ருர் காக முனிவரின் குறளடிகளில் கண்ட கருத்தையே அவ்வையின் குறள் வடித்தளிக்கின்றது,

''இமையாத நாட்டத்திருந்துணர் வார்க்கு
கமையாத வானந்தமாம்.

இப்படியாக வளிநிலேயை வகைதொகையாக வரிசைப் படுத்திய அவ்வை அழிவகை ஆக்கையை அழியாமையாக்கும் வழிகூறுகின்ருர்,

''வாக்கு மனமுமிறந்த பொருள்காணின்
ஆக்கைக்கு அழிவில்லேயாம்''—அவ்வை.

''மறவாமற் காணும் வகையுணர்வாருக்கு
இறவாதிருத்தலாம்.''—அவ்வை.

''அஞ்சு புலனின் வழியறிந்தாற் பின்னேத்
துஞ்சுவதில்லேயுடம்பு''—அவ்வை

நாபி, உந்தி, மணிபூரகம், மால்வீடு, குடிலே என்னும் சக்தியாவும் ஒன்று.

''நாபியகத்தே நலனுற நோக்கிடில்
சாவதுமில்லே யுடம்பு''—அவ்வை

இதையே திருமூலர்

''நாசிக்கதோ முகம் பனிரண்டங்குலம்
நீ சித்தம் வைத்து நினேக்கவும் வல்லேயேல்
மாசித்தி யோகம் வந்து தலேப்பெய்தும்
தேகத்துக் கென்றும் சிதைவில்லேயாமே.

இதையே,

''வளியினே வாங்கி வயிற்றிலடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழக்கினும் பிஞ்சாம்''
என்று இளமை வழியை, துரிய வெளிப்பெருமையை முரசடிக்கின்ருர் அவ்வை.

(11ம் பக்கம் பார்க்க)

(4ம் பக்கத் தொடர்ச்சி)

போ சாமி'' என்று பூக்கடைக்காரன் நச்சரிக்கிறான். அவனிடம் 'பூ' வாங்காமல் புலிவலம் திரும்ப முடிவதில்லை. வாங்கிய பூவாடி வீணாகப் போகிறதே என்று உடனே தஞ்சாவூருக்கு டிக்கட் வாங்கவேண்டியிருக்கிறது!'', என்பான் சாம்பு.

சாரதா கலகலவென நகைப்பாள்.

''பார்த்தியா! இப்படி நீ சிரிப்பதை நான் எப்படிப் புலிவலத்திலிருந்து பார்த்து ரசிக்கமுடியும்? நம் ஊருக்கெல்லாம் இன்னும் பாழாப்போன டெலிவிஷன் வரவில்லயே!'' என்பான்.

அழுவதா சிரிப்பதா என்று புரியாமல் அவள் தவிப்பாள். இப்படித்தான் வாரந்தோறும் விஜயம்செய்து பிராணனை வாங்குவான். வாழ்க்கையைச் சிக்கனமாக நடத்தவேண்டுமென்பது சாரதாவின் விருப்பம். கொள்ளையடித்த பணத்தைப் போலீஸ் இலாகா கைப்பற்றி விடுவதற்குள் செலவழித்துத் தீர்த்துவிடவேண்டும் என்று திருடன் எண்ணுவதைப்போல்பொய்யாமொழிப் புரொவிஷன் ஸ்டோர் உரிமையாளர் பரிசுத்தநாடார் வாரந்தோறும் தரும் பத்து ரூபாய் நோட்டை முப்பத்துநான்கு மைல் தூரத்திலுள்ள சாரதாவைப் பார்க்கப் போய்வருவதில் சூறைவிடுவது சாம்புவின் வழக்கம்.

''ஆமாம்! காலையில் என்ன சாப்பிடுகிறீர்கள்?'' என்பாள் சாரதா.

''என்னத்தைச் சாப்பிடுவது! நித்யானந்த பவனில் நித்தியக்கடனை முடித்துக்கொள்ளுகிறேன். இரண்டு கப் சூடான காபிக்கு ஆர்டர் கொடுக்கிறேன். ''குடும்பம்'' என்ற போர்டு தொங்கும் பகுதியில் எதிரில் ஒரு கப் காபியை வைத்துவிட்டு மற்றொரு கப் காபியை நான் குடிக்கிறேன்.''

''அந்தக் காபி யாருக்கு?''

''உனக்குத்தான்; நீயில்லாமல் என்னால் தனியாகக் காபி குடிக்க முடியாதென்பது உனக்குத் தெரியாதா என்ன?''

''நல்ல பைத்தியம் போங்கள்! ஹோட்டல்காரன் எதுவும் நினைக்கமாட்டானா?''

''நினைக்க மாட்டானாவது? ஒருநாள் வாய்விட்டுக் கேட்கக்கூடக் கேட்டான்.''

''நீங்கள் என்ன பதில் சொன்னீர்கள்?''

''என்ன சொல்லியிருப்பேன்?''

''இங்கே பாருங்கள்! எனக்குக் கற்பனை சக்தி கிடையாது ....கற்பனை சக்தியை நான் வளர்த்து வந்தால் கட்டாயம் பரீட்சையில் கோட் அடித்துவிடுவேன்''

''சேசே! விரஸமான பரீட்சை விஷயத்தை இந்தச் சுவாரஸ்யமான ''டைலாக்'' நடுவில் கொண்டுவராதே!— ஆமாம்....நான் என்ன பதில் சொன்னேன் தெரியுமா?

''ஐயா! ஹோட்டல்காரரே! அந்தக் காபி என் மனையரசிக்கு! அவள் எங்கேயிருந்தால் எனக்கென்ன; அவளும் நானும் மேஜையின் எதிரில் எதிரும் புதிருமாய் அமர்ந்து இதே ஹோட்டலில் எத்தனையோ தடவை காபி குடித்திருக்கிறோமே!....அதை நீங்கள் மறந்துவிட்டீர்களா?'' என்பேன். அவர் பதில் பேசாமல் சிரித்தபடியே நாலணா பில்லுக்கு இரண்டணா மட்டும் வாங்கிக்கொள்வார்.

''இங்கே பாருங்கள்! ஏன் இப்படிப் பரபரக்கிறீர்கள்? உங்கள் அனுமதியுடன் உங்கள் நலனுக்காகத்தானே நான் இங்கே படிக்க வந்திருக்கிறேன்....இன்னும் கொஞ்ச நாள் பொறுத்துக்கொள்ளுங்கள்....முதல் நாளிரவே பால் வாங்கி வைத்திருந்து விடியற்காலம் ஐந்து மணிக்கே காபி போட்டுத் தருகிறேன்'' என்பாள் சாரதா.

''இங்கே பார்! நீ தினந்தோறும் அப்படிச் செய்யும் உபசாரம் ஒருபுறம் இருக்கட்டும்....வாரம் ஒருநாள் எனக்காக நீசெலவழிக்கக்கூடாதா? இன்று நீ பள்ளிக்கூடம் போகாதே!'' என்று குழந்தைபோல் சிணுக்குவான் சாம்பு.

ஆசிரியத்துறையில் பயிற்சி பெறுகிறவர்கள் எதிர்காலத்தில் மாணவ மாணவியரை நேரிடையாகச் சந்திக்கும்போது அவர்கள் பெற்ற போதனாமுறைப் பயிற்சி எவ்வளவுதூரம் உபயோகப்படும் என்பது சிந்திக்கவேண்டிய விஷயந்தான். கல்வி திட்டத்தைப் பற்றிச் சீர்திருத்தப் பேச்சுப்பேச நம் நாட்டு முடிசூடா மன்னர்கள் அனைவரும் உரிமை பெற்றிருக்கிறார்கள். எனக்கு இந்த மாதிரிப் படிப்புத்தான் வேண்டுமென்பதை நிர்ணயிக்கும் உரிமை பச்சிளங் குழந்தைகளின் பரிபக்குவமடையாத மூளைக்குள் புகுத்தப்பட்டிருக்கிறது. இந்த நிலையில் ''ஹெர்பெட்''டின் சித்தாந்தங்களை உருஅடித்துப் போதனாமுறைப் பரீட்சையில் பாஸ் செய்வதைத் தவிர ஆசிரியத்துறை மாணவர்கள் வேறு என்ன செய்ய முடியும்?

ஆனால் துரதிருஷ்டவசமாகச் சாரதாவால் அந்தப் பரீட்சையில்தேறமுடியவில்லை.ஞாயிறு மட்டுமே அவளுக்கு விடுமுறை. வெள்ளிக்கிழமைதோறும் விஜயம் செய்யும் சாம்பு அவளை ஊர்சுற்றவும் சினிமா டிராமா தியேட்டர் விஜயம் செய்யவும் அழைத்துச் செல்வதால் சனிக்கிழமை வகுப்பில் நடைபெறும் வாராந்திரத் தேர்வில் அவளால் நல்ல முறையில் எழுதி மதிப்பெண் பெறமுடியாதுபோய்விட்டது. போதாக்குறைக்கு வகுப்பில் போதிய நாட்கள் ஆஜரில்லாததால் கஷ்டப்பட்டுச் சிபாரிசு பிடித்துப் பரீட்சையில் உட்கார அனுமதி வாங்க நேரிட்டது. இப்படியெல்லாம் செய்தும் அவளால் பரீட்சையில் வெற்றிபெற முடியவில்லை.

எந்தப் பரீட்சையின் வெற்றியை வாழ்வின் வெற்றிக்கு அடிப்படையாக அவள் கருதினாளோ அந்த வெற்றிக்கு வெள்ளிக்கிழமை விடுமுறையே சத்ருவாக வந்தமைந்தது. அந்த துக்கம் தாங்காமல் சாரதா விம்மி விம்மி அழுதாள். பரீட்சை முடிந்ததும் நேராகப் புலிவலத்திற்கு வரவேண்டுமென்றிருந்த அவள் மனமுடைந்து பிறந்தகம் சென்றாள்.

அவள் படித்துப் பட்டம் பெறவேண்டிய நாளில் வாரந்தோறும் விஜயம் செய்த சாம்பு தற்போது அவளிருக்குமிடம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. இன்று வருவான் நாளைவருவான் என்றுசாரதா ஒவ்வொரு நாளும் அவன் வரவை எதிர்பார்த்து ஏமாந்துபோனாள். ஒவ்வொரு வெள்ளிக்கிழமை லீவிலும் அவன் வரவேண்டியவன் தானே! ஏன் வரவில்லை?

சாரதா கார்டு எழுதினாள். கவர் எழுதினாள்—தரை மார்க்கத் தபால் எழுதினாள்..தெரிந்தவர்கள் மூலம் தூது விடுத்தாள்....சாம்புவிடமிருந்து பதிலே இல்லை!

சாம்பு என்ன ஆனான்? அவன் எங்கே போனான்? ஆதாரமில்லாத—உறுதி செய்யப்படாத—வதந்தி ஒன்று உலவிற்று. சர்க்கார் தடைவிதித்த மதுவை அருந்தாமலே சாம்பு மதுமயக்கத்தில் மதியிழந்து கிடக்கிறானாம். பொய்யாமொழி ஸ்டோர் வேலைக்குத் தலைமுழுகிவிட்டுத் திருமலைராஜன்பட்டினத்தில் தேவகியின் மையலில் உணர்விழந்து கிடக்கிறானாம். பிதுரார்ஜிதம் என்ற பெயரில் அவனுக்கு மிச்சமிருந்த நிலபுலன்களை தேவி தேவகி தன் பெயருக்கு எழுதிவாங்கிக்கொண்டுவிட்டாளாம்.

சாரதா முதலில் திருக்கண்ணபுரத்துக்கு வந்தாள். துலுக்கநாச்சியாரின் மையலுக்குத் தன் கணவன் சௌரிராஜனைப் பறிகொடுத்த கண்ணபுர நாயகியின் சன்னதியில் விழுந்து கதறினாள். ''ஐயோ! அவருக்கு நான் உதவவேண்டுமென்று எண்ணித் தானே படிக்கப்போனேன் .... என்னை அவர் உதவாக்கரை என்று ஒதுக்கிவிட்டுப் பள்ளத்தில் விழுந்து விட்டாரே!'' என்று ஓலமிட்டாள்.

''இல்லை சாரதா! நீயல்ல உதவாக்கரை!...இதோ நானிருக்கிறேன்........முன் ஜென்ம வினையின் பயனை இந்த ஜன்மத்தில் அனுபவிப்பதாகப் பெரியோர் சொல்வார்கள். இதோ இந்த ஜன்மத்தில் வினைப்பயனையே நான் அனுபவித்துக்கொண்டிருக்கிறேன்.'' என்ற புலம்பலுடன் சாம்பு எதிர் வந்தான்.

சப்பித் துப்பிய மாங்கொட்டைபோல் அவன் கன்னங்கள் வற்றிவிட்டன. நீர் வற்றிய

(10ம் பக்கம் பார்க்க)

# மாணவர் மன்றத்தில் உலகப் பெரியவர்கள்

## பெரியவர்களை இளைஞர்கள் விடாது கேள்வி கேட்கும் அமெரிக்க டெலிவிஷன் நிகழ்ச்சி.

பெரியவர்களை இளைஞர்கள் கேள்விகேட்டுக் கேட்டுத்துளைக்கும் டெலிவிஷன் நிகழ்ச்சி ஒன்று அமெரிக்காவில் ஒன்று விட்டு ஒரு ஞாயிறு தோறும் ஒழுங்காக நடைபெறுகிறது. அதனை அந்நாடு நெடுகிலும் மக்கள் கண்டு இன்புறுகிறார்கள். கண்டு பயனும் அடைகிறார்கள். அது களிப்பூட்டுவதும் அன்றி கல்வியும் ஊட்டுகிறது.

உலக விவகாரங்களில் பேர் அடிபடுகிறவர்கள் அங்கு மாணவ மாணவிகளிடம் அகப்பட்டு அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் விடை சொல்லித் தீர வேண்டியவர்களாகிறார்கள். அமெரிக்கர் மட்டுமல்ல, பிறரும் பலர் இந்த டெலிவிஷன் நிகழ்ச்சியில் தோன்றியுள்ளனர். இவர்களில் ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட், ஹோமி ஜே. பாபா, இந்தோனேஷிய ஜனாதிபதி சுகர்ணோ ஆகியவர்கள் சிலர். இந்த நிகழ்ச்சி தொடங்கி சென்ற மாதத்தோடு நான்கு ஆண்டு முடிந்து விட்டது. இந்த நான்கு ஆண்டுகளில் இதில் தோன்றிய பெரியவர்கள் 200 பேருக்கு மேலாவர்.

இவ்வாறு நாட்டு நடப்புப் பற்றியும் உலக நடப்புப் பற்றியும் ஊக்கமாகக் கேள்வி கேட்டறியும் மாணவ மாணவிகள் வாஷிங்டன் பகுதியில் உயர்நிலைப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் படிப்பவர்களாவர். தேசியக் கல்விச் சங்கம் என்பது இவர்களைப் பொறுக்கியெடுக்கின்றது. ஆதிமுதலே இந்த இளைஞர் குழுவில் தவறாமல் தோன்றியுள்ள பையன்களும் பெண்களும் சிலர் உளர்.

இங்கட்கிழமை காலையில் வெளியாகும் பத்திரிகைகள் ஞாயிற்றுக்கிழமை பிற்பகலில் நடக்கும் இந்த நிகழ்ச்சியை நன்கு கவனிப்பது வழக்கம். நுண்ணறிவு படைத்த மாணவர் துளைத்துக் கேட்கும் கேள்விகளுக்குப் பேரும் புகழும் படைத்த பெரியவர்கள் கூறும் விடைகள் அப்பத்திரிகைகளுக்கு ஏற்றசெய்திகளாகும்.

இந் நிகழ்ச்சியை உடனிருந்து நடத்துவிக்கும் ஸ்டீவ் மெக்கார்மிக் என்பவர், அன்றுட நிகழ்ச்சிகளைப் பத்திரிகைகளைப் படித்து அறிந்து கொள்வது நலம் என்று மாணவர்களுக்கு ஊக்கமூட்டுவார். வரப்போகும் பெரியவர் எந்தத் துறையில் பேர் போனவரோ அதுபற்றி முன்னரே படித்துத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் வழி காட்டுவார். நிகழ்ச்சி நடக்கவிருக்கும் ஞாயிற்றுக்கிழமைக்குமுந்திய வெள்ளிக்கிழமையன்று இந்த இளைஞர்கள் வட்டமேஜை மகாநாடு கூடி, வரும் பெரியவரைப் பற்றியும் பல்வேறு விஷயங்களைக் குறித்து அவருக்கு இருக்கும் கருத்துக்களைப் பற்றியும் இரண்டுமணி நேரம் பேசுவார்கள். இன்னின்ன கேள்வி கேட்க வேண்டும் என்று முன்னரே குறித்துக் கொள்வது கிடையாது. மாணவர் தாமே தமது கேள்வியைத் தயார் செய்யவேண்டும் என்பவர் மெக்கார்மிக்.

பெரியவர் நேரே விடை சொல்லாமல் போனால், இந்த இளைஞர்கள் விடுவதில்லை.

ஒன்றைப் பற்றிய பேச்சு தளர்ந்து சோர்ந்து வருமானால், பேச்சை மாற்றவேண்டும் என்கிறார் மெக்கார்மிக் அவரே ஒருபென்சிலைஎடுத்து ஆட்டி, பேச்சை மாற்றும்படி குறிப்பிடுவதுண்டு. ஆனால் அவர் செய்கை காட்சியில் தெரியாது.

ஒவ்வொரு நிகழ்ச்சியிலுமே நினையாதது ஏதாவதொன்று நேர்ந்திருக்கிறது. ஒரு சமயம் அமெரிக்க செனட்டர்பாரி கோல்டுவாட்டர் என்பவர் இந்நிகழ்ச்சியில் தோன்றினார். தமது மகனே அங்கு கேள்வி கேட்பாரோடு அமர்ந்திருக்கக் கண்டதும் அவருக்கு ஆச்சரியமாய்விட்டது.

மாணவர்கள் விமானம் ஓட்டப் பழகுதல் வேண்டும் என்று வலியுறுத்திப் பேசிக் கொண்டிருந்தார் செனட்டர். அதுதான் சமயம் என்று நினைத்தான் மகன். விமானம் ஓட்டப் படிப்பதற்கு விடை தாருங்கள் உடனே என்றான்; நாடு நெடுகப் பல்லாயிர மக்கள் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். என்ன செய்வார் செனட்டர்? சரி என்றார்.

——

### உப்பு ஏற்றுமதி

இவ்வாண்டில் முதல் ஆறு மாத காலத்தில் மொத்தம் 3,21,256 டன் உப்பு ஏற்றுமதி செய்யப்பட்டது என்றும் 1956-ம் ஆண்டில் இதற்குச் சரியான காலத்தில் ஏற்றுமதி செய்யப்பட்ட உப்பின் மொத்த அளவு 1,00,400 டன் என்றும், மத்திய வர்த்தக தொழிலியல் உப மந்திரி ஸ்ரீ சத்திஷ் சந்திரா லோக் சபாவில் ஒரு கேள்விக்கு எழுத்து மூலம் பதிலளிக்கையில் கூறினார். வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படும் உப்புக்கு செஸ் வரி விதிப்பிலிருந்து விலக்களிக்கப் பட்டிருக்கிறது என்றும், ஏற்றுமதித் தோதுகள் பற்றி உப்பு உற்பத்தியாளர் சங்கங்களின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டது என்றும் உப மந்திரி மேலும் கூறினார்.

(9ம் பக்கத் தொடர்ச்சி)

தேவகோட்டைக் கிணறுகள் போல் அவன் கண்கள் நீரோட்டமின்றி இருண்டு கிடந்தன. எக்ஸ்ரே படத்தில் பார்க்கும் எலும்புக்கூடே எதிர்வந்தாற்போல் அவன் எதிரில் நின்றான்.

சாந்தா சரேலென்று அவன் காலடியில் பாய்ந்தாள்—"என்னை மன்னியுங்கள்! வாழ்க்கைப் பாடம் படிக்கவேண்டியவள் வேறு பாடம் படிக்கப் புகுந்ததன் விளைவு இது....... படித்து எழுதும் பரீட்சையில் தோல்வி கண்டேன்....படிக்காத–எழுதாத பரீட்சையில் நல்ல வேளையாகத் தோல்வி காணவில்லை?" என்று கதறினாள் அவள்.

கண்ணபுரநாயகி கலகலவென்று நகைத்தாள். வெள்ளிக்கிழமைப் புறப்பாட்டுக்கு வேண்டிய ஆயத்தம் செய்ய பட்டாசாரியார் சாவிக்கொத்துடன் வந்துகொண்டிருந்தார்!

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

உடலுக்குள் உயிர்புகுந்த விதம் நாபியின்வழியாக என்று ஞானக்கோர்வை நவில்கின்றது. உடலுக்குள் உயிர் எவ்வாறு புகுகின்றதென்பதை, விஞ்ஞானத்தை இற்றைக்கு இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்பே தெளிதமிழில் லாகவமாக எடுத்துச் சொன்னவர் அவ்வை.

**மனிதன் பிறப்பது உந்தி. இறப்பது வன்னி.** இந்த விஞ்ஞானத்தையே,

"பிறந்திட மாலிடம் பேருதிருப்பின்
இறந்திடம் வன்னியிடம்"—அவ்வை.

மேலும்,

அவ்வை விநாயக வழிபாட்டில் அன்புடையவர். சித்தர் கண்ணோட்டப்படி மூலாதாரமும், அதின் கண்ணுள்ள குண்டலினி சக்தியும், கணேசனிருப்பிடமென்போம். அதைத் திரிகோண பீடமென்றும் கூறுவர். பிள்ளையார் சுழியென்பர். மூலமுதல் ஆருதார நிலைகண்ட போகி என்பதால்தான் அவ்வையாரெனப் பெயர் கொண்டார்.

"அகாரத்தின் மேலாக கணேசனிற்பார்" என்றார் போகர். "விநாயகரகவல்" பாடிய அவ்வை, அகாரமாம் மூலாதாரந் தொடங்கியும் கலைஞானம் கண்டதால், "அ"வ்வை முதலாகக் கொண்டு சித்தி பெற்றதால், "அவ்வை"யென அழைக்கப் பெற்றார். அதையே, **"அகர முதல வெழுத்தெல்லாம்"** என்கிறது குறள்.

மூலாதாரத்தில், பிள்ளையார் சுழியில், தியானம் தொடங்கி சித்தி பெற்றவர் அவ்வை. குண்டலியின் ஆற்றலை, வல்லமையை, **வல்லபை யென்றும்** பிள்ளையாரெனும், மூலாதாரத்தின் மனைவியென்றும் கூறுகின்றோம். மேலும் ஞானந்தருவதால் புத்தியென்றும், சித்தி தருவதால் சித்தியென்றும் என்பதை உணர்த்த, பிள்ளையாரின் மனைவிகளாக **சித்தியை, புத்தியைக்** கூறுகின்றோம்.

"கருணை மதம் பொழிமுகத்துக் கணேசரவர்
தமக்கு அறிவுந் தொழிலுமான
அருளெனு முண்மையை எவரும் அறிய அவர்
உமையின் அவதரித்த ஞான்றும்
ஒருமுனி யோம் பியதழலின் அவதரித்த
ஞான் றுமுடனுகித் தோன்றித்
திருவுளத்தின் வழிநிற்கும் **சித்தி புத்தி**
எனுமிவர்தாள் சென்னி சேர்ப்பாம்."
—விநாயக புராணம்

இந்த மாபெரும் தத்துவத்தைக் கீழ்க்காணும் **கருவூராரின்** வெண்பா விளக்குகின்றது.

"திருவாக்கும் செய்கருமங் கைகூடும்
பெருவாக்கும் பீடும் பெருகும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனைமுகத் தைங்கரனை
காதலால் கூப்புவர் தம்கை"

அவ்வையின், "அ"கரமெனும் மூலாதார எழுத்தை யுணர்ந்தவராகையினாலேதான் "எழுத்தறிவித்தவன் இறைவனாகும்" என்கிறோம். இதையே,

"பரைகின்றேன் அகாரமது மூலத்தில் நிற்கும்
பண்பான உகாரமது கண்டத்தில் நிற்கும்
வரைகிறேன் மகாரமது மனோண்மணியில் நிற்கும்
வாகாக யிழுத்து மொன்றாய் கூட்டினுக்கால்
நிறைகிறேன் மவுனமது அறிவில் கூடும்
நின்றுரைக்கில் கண்டந்தானுள்ளே கொள்ளும்
இறைகிறேன் நடக்கையிலு மிருக்கையிலுமைந்தா
யிருந்துரைக்கப் பிரபஞ்சமெல்லா மொளியதாய்
போச்சே"

இப்படியாக அகார உகார மகாரமென்றுள்ள ஏகாட்சர பிரணவமென்னும் பிள்ளையார் சுழியினால் மோனமென்னும் ஞானவரம்பையும் ஒளி நிலையும் பெற்றவர் அவ்வையார்.

இன்னும் மேலாக

"செவ்வையாய் நின்றுரைத்த பழக்கமானால்
சிறப்பான மனோமணிதான் புருவமையத்தே
அவ்வையா மொளியோடே மவுனத்தையூது
மகத்தான சாம்பவியை கண்டுகொள்வாய்"

என்று போகர் பாடுகின்றார்.

ஆகவே, "அ"வ்வெழுத்தை ஆதாரமாகக் கொண்டு சித்தி பெற்றவர் "அவ்வை". "அ"கர மென்னும் ஆதி முதலெழுத்தைக் கொண்டு, மூலாதாரத்தில் நின்றிலங்கும் பிள்ளையாரைக் கொண்டு சித்தி புத்தி பெற்றவர் அவ்வை"! 'அவ்வை' என்பின் "ஒளி" என்பதை முற்கூறிய பாடல் தெளிவாகக் கூறுவதைப் பாருங்கள்!

"அவ்வை" என்பின் "ஒளியுடல் பெற்றவர்" என்பது விளக்கம்!

**"தத்துவமாவதகார எழுத்தே"** மூலரின் மொழியுணர்ந்தவர் ஆகையினால் "அவ்வை"

இவ்வுண்மைகளின் சாரத்தை, தனது சொந்த அனுபவத்தை, பெற்ற படிப்பினைகளை வையம் வாழவைக்கிறார் அவ்வையார்.

"உருவத்தழலாக வுள்ளத்தே சென்று
புருவத்திடை யிருந்து பார்—அவ்வை.
"புருவத்திடை யிருந்து புண்ணியனைக்காணில்
உருவற்று நிற்குமுடம்பு"—அவ்வை.

அகார, உகாரமென்னும், ரவி, மதியின், சக்தி சிவத்தின், கார, சாரத்தின் தரம் உணர்ந்து கலைஞான ஒளி வழியில், மூன்று மண்டலங்களின் முறை கண்டு, சுழிமுனைத்துறை வழிநின்று, மூலாதாரக் கணேசனருளால் விக்கினமென்னும் பிறவித்தளையும், மரணமெனும் அல்லலையும் அறுத்து, உடம்புகளில் இயங்கும் வாயுவுணர்ந்து கபாலமென்னும் பிரம்ம கபாலத்தில், ஆயிரத்தெண்மலரிலமர்ந்து வெற்றிக் கொடி நாட்டினவர் அவ்வை. இந்த ஒப்பற்ற பாதையைக் கீழ்வரும் குறட்பாக்களில் காண்க.

"ஈரெண்கலை யினிறைந்த வமிர்துண்ணில்
பூரணமாகும் பொலிந்து"
"ஓங்காரமான கலசத்தமிர்துண்ணில்
போங்காலமில்லை புரிந்து"
"நிலாமண்டபத்தில் நிறைந்த வமிர்துண்ணில்
உலவலா மந்திரத்தின் மேல்"

இதையே, அவ்வை "விநாயகரகவ"லில் கீழ்வருமாறு கூறுகின்றார்.

(7-ம் பக்கம் பார்க்க)

# கோர்ட் விளம்பரங்கள்

### குளித்தலை டி. மு. கோர்ட்

S. C. 393/1957

வைத்திநதைய்யர் —வாதி
சேவுகன் முத்திரியர்
—பிரதிவாதி

ஷ நம்பரில் புரோநோட்டின் படி ரூ. 185—75-க்கு தாவா செய்து 7-9-1957௨ ஈரங்கி ஏற்பட்டிருக்கிறது என்பதை தெரிவிக்கப்படுகிறது.

R. வரதராஜன்,
அட்வொகேட்.

### திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 656/1957

C. T. பழனியப்ப செட்டியார் —வாதி
தி. தா. ஸ்ரீரங்கம் மேல சித்திரவீதி Door No. 167 வீட்டிலிருக்கும்
T. K. அமிர்தகடேசன் 1
ராஜம்மாள் 2
—பிரதிவாதிகள்

ஷ நெ. பிரதிவாதிகள் பேரில் புரோநோட்டுப்படி ரூ. 348—12—0 பின் வட்டி சிலவுவகையருகிடைக்க வாதி தாவா செய்து 2—9—57௨ ஈரங்கி போடப்பட்டிருக்கிறது.

எம். எஸ். சுந்தரராஜன்,
வாதி அட்வகேட்.

### குளித்தலை டி. மு. கோர்ட்

I. P. 3/57

மு. தா. முருங்கைகளத்தூர் பெரியண்ணன் மூப்பன் மகன் ராமன் மூப்பன் —மனுதார்

மு. தா. முருங்கைகளத்தூர் மஜரா சேர்வைகாரன்பட்டி செல்லம்மாள் மகன் கிருஷ்ணசாமி —7-ம் எதிர்மனுதார்

7-வது எதிர்மனுதார்க்கு:

மனுதார் தன்னை இன்ஸால்வெண்டு என்று தீர்மானம் செய்து தர மனு கொடுத்து நோட்டீஸ் வாய்தா 19-9-57ல் வைக்கப்பட்டிருக்கிறது. ஆட்சேபணையுள்ளவர்கள் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளத் தவறினல் ஒருகட்சி உத்திரவுகள் ஏற்படும் என்பதை அறியவும்.

(Sd) K. Rajagopala Aiyangar,
Vakil for Petitioner.

### திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 2544/52

E. P. 1251/56

துரைசாமி பிள்ளை —வாதி
S. T. முருகபூஷணம்&others
—பிரதிவாதி

3-ம் பிரதிவாதி T. S. நமசிவாய ஆசாரிக்கு நோட்டீஸ்,

மனுதார் இஸ்தியாரின் ஷரத்துக்களை நிஷ்கரிஷை செய்ய வேணும்ாய் மனுதார் மனு 3—9—57௨ ஈரங்கி போடப்பட்டு இருக்கிறது. அன்று தங்கள் ஆக்ஷேபணையை ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

(Sd) R. Sundaresan,
Pleader.

### கும்பகோணம் டி. முன்சீப் கோர்ட்

1957ஞு O. S. 140-நெ.
L. CT. SP. L. லெக்ஷ்மணன் செட்டியார் by agent V. R. ராமநாதன் செட்டியார் —வாதி
E. M. ஜாகிரியா சாயபு by agent மகம்மது முஸ்தபா 1
G. பாலகிஷ்ண நாயுடு 2
—பிரதிவாதிகள்

ஷ வாதி வக்கீல் அறிவிப்பதாவது:—

2-ம் பிரதி வாதியால் முதல் பிரதிவாதிக்கு 27—8—56-ல் ரூ. 32000-க்கு எழுதிக் கொடுத்திருக்கும்சாஸனம் கடன்காரர்களை மோசம் செய்யயேற்பட்டதென்றும் செல்லாதென்றும் அதை ரத்து செய்யவேணுமென்றும் வாதியால் 2-ம் பிரதிவாதியின் கடன்காரர்களுக்கு Represantative முறைமையில் ஷ நம்பரில் தாவா செய்யப்பட்டு 12—9—57௨ ஈரங்கி கெடுகுறிக்கப்பட்டிருப்பதால் ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷ தேதியில் பகல் 10-மணிக்கு ஷ கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

(ஒ) T. K. Aravamudha
Aiyangar,
Advocate.

### குளித்தலை டி. மு. கோர்ட்

S. C. 497/57

துரைராஜன் —வாதி
ராசுப் பிள்ளை —பிரதிவாதி

வாதி, பிரதிவாதி பேரில் புரோநோட்டுப்படி தாவா செய்து 6—9—57-ல் கெடு ஏற்பட்டு இருப்பதால் ஆக்ஷேபணை உள்ளவர்கள் தெரிவித்துக்கொள்ளவேணுமாய் கோரப்படுகிறது.

M. K. ருதாகிருஷ்ண அய்யர்,
வாதி வக்கீல்.

### குளித்தலை டி. மு. கோர்ட்

S. C. 513/57

A. P. S. சேதுராம பிள்ளை
—வாதி
முத்துக்காத்தான் வகையரு
—பிரதிவாதிகள்

வாதிக்கு 1—2 பிரதிவாதிகள் தகப்பனும், 3-ம் பிரதிவாதி புருஷனுமான இறந்துபோன சாய்ய நாடார் எழுதிக்கொடுத்த புரோநோட்டின் படி ரூ. 166—15—0-க்கு செய்திருக்கிற தாவா 7—9—57-ல் வாய்தா போடப்பட்டிருக்கிறது.

(ஒம்) எஸ். அண்ணுத்துரை
அய்யங்கார்,
வாதி வக்கீல், குளித்தலை.

### காந்திஜீ சமாதி மாடல்

காந்திஜீ சமாதிக்கட்டடத்துக்கான பல்வேறு டிஸைன் உருவங்களையும் மதிப்பீடு போர்டு பரிசீலித்து மிகச் சிறந்த நான்கு டிஸைன்கள் வரிசைக் கிரமப்படி பரிசுகள் வழங்குவதற்குத் தெரிந்தெடுத்து விட்டதென்றும், முதலாவது பரிசு உருவப்படி மாடல் (மாதிரி உருவமொன்றை) தயாரிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறதென்றும், அதைக் கவனித்து இது சம்பந்தமாக இறுதி முடிவு செய்யப்படுமென்றும் மராமத்து-வீட்டு வசதி-சப்ளை மந்திரி ஸ்ரீ கே. ஸி. ரெட்டி லோக் சபாவில் கேள்வி நேரத்தில் தெரிவித்தார்.





Edited and Published by Thiruloka Sitharam for theShivaji Private Ltd and Printed by A. V. R. Krishnasami at Kannan Press, Tiruchy-2